ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்.



" குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம் "

| மலர் 3 Vol. 3 | வெகுதான்ய ௵ ஆவணி௴<br>ஆகஸ்ட்—1938 | இதழ் 5. No. 5. |
|---|---|---|

## திருப்புகழ்.

### பழநி—(திருவாவிநன்குடி)

நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித சாமீ நமோநம — வெகுகோடி
நாம சம்புகு மாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாகபந்தம யூரா நமோநம — பரசூரர்
சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம — கிரிராஜ
தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம — அருள்தாராய்
ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையு — மறவாத
ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக — வயலூரா

ஆத ரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி
ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே

## பதவுரை

ஈதலும்-இரப்பவர்க்கு இல்லையென்னாது ஈந்து உதவிசெய்யும் ஈகையும், பல கோலால பூசையும் - பற்பலவாறு கோலாகலமாக (ஆடல் பாடல் விழா மேளதாளம் முதலியவைகளுடன்கூடி) ச்செய்யும் பூசையும், ஓதலும்—வேதம் ஆகமம் முதலிய அறிவு நூல்களையும், தேவாரம் திருவாசகம் முதலிய முத்தி நூல்களையும் ஓதியுணரும் தன்மையும், குண ஆசார நீதியும் - நற்குணம் நல்லொழுக்கம் சிவநெறியில் நிற்கும் நன்னிலை இவைகளும், ஈரமும் - கருணையும், குருசீர்பாத சேவையும் - சற்குருமூர்த்தியினுடைய சிறந்த சரணாரவிந்தங்களைச் சேவித்து தொண்டுபுரிதல் முதலிய நன்னெறிகளை, மறவாத - ஒருகாலத்திலும் மறவாத தன்மையுடைய நல்லவர்கள் வாழுகின்றதும், ஏழ்தலம்புகழ் - ஏழு தீவினர்களாலும் புகழப்படுகின்ற, காவேரியால் விளை - காவேரி நதி பாய்தலினால் வளம்பெறுவதுமாகிய, சோழமண்டல மீது - சோழ மண்டலத்தின்கண், மனோகர - மனத்தைக் கவரும் வளப்பத்தை யுடையதான, ராஜ கெம்பீர நாடு ஆளும் நாயக - ராஜ கெம்பீர வள நாடு என்னும் பகுதியை அரசு செய்யும் தலைவரே! வயலூரா - (அந்த ராஜகெம்பீர வளநாட்டின் மத்தியிலுள்ள) வயலூர் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ளவரே! ஆதரம்பயில் - அன்பு பொருந்திய, ஆரூரர் தோழமை சேர்தல்கொண்டு - சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய நட்பை மிகவும் நெருக்கமாகக்கொண்டு, அவரோடே - அவர் (ஆரூரர்) திருக்கைலாயத்திற்குப் புறப்பட்டபோது அவருடனேயே, முன் நாளினில் - முன்னொரு நாளில், ஆடல் வெம் பரிமீது ஏறி - ஆடுவதும் போருக்குரிய உக்கிரமுமுடையதுமாகிய புரவியின் மீது ஏறிக்கொண்டு, மா கயிலையில் ஏகி - பெருமை பொருந்திய திருக்கைலாய மலைக்குச்சென்று, ஆதி அந்த உலா ஆசு பாடிய - அந்தாதியாகவுடைய ஆதி கைலாச உலாவை ஆசு கவியாகப் பாடியருளிய, சேரர் கொங்கு வை காவூர் நன்னாடதில் - சேரமான்பெருமாள் நாயனார் அரசு செய்யும் பாக்கியத்தைப்பெற்ற கொங்கு தேயத்திலுள்ள



நல்லகாவூர் நாட்டின்கண் விளங்கும், ஆவினன்குடி வாழ்வான- திருவாவினன்குடி என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள, தேவர்கள் பெருமாளே - தேவர்களுக்கெல்லாம் தேவராகிய பெருமையையுடையவரே! நாத விந்து கலை அதீத - நாதம் விந்து கலை' என்பவைகட்கும் அப்பாற்பட்டு நிற்பவரே!, நமோ நம - நமஸ்காரம் நமஸ்காரம், வேத மந்த்ர சொரூபா - வேதமந்திரங்களின் வடிவமாக விளங்குபவரே! நமோ நம - நமஸ்காரம் நமஸ்காரம், ஞானபண்டித ஸ்வாமீ - ஞான வல்லுனரே!, நமோ நம - நமஸ்காரம் நமஸ்காரம், வெகு கோடி நாம சம்பு குமாரா - அநேககோடி திருநாமங்களையுடைய சிவபெருமானது திருக்குமாரரே!, நமோ நம - நமஸ்காரம் நமஸ்காரம், போக அந்தரி பாலா - நலன்களை அனுபவிக்கச்செய்யும் போக சத்தியாகிய உமாதேவியாரது புதல்வரே!, நமோ நம - நமஸ்காரம் நமஸ்காரம், நாக பந்த மயூரா - கால்களில் பாம்புகள் சுற்றப்பட்டுள்ள மயில்வாகனத்தையுடையவரே!, நமோ நம - நமஸ்காரம் நமஸ்காரம், பர சூரர் சேத தண்ட விநோதா - பகைகொண்டு வந்த சூராதியவுணர்களைத் தண்டித்து சேதித்தருளிய திருவிளையாடலைப் புரிந்தவரே!, நமோ நம - நமஸ்காரம் நமஸ்காரம், கீத கிண்கிணி பாதா - இனிய நாதத்தோடு கூடிய சதங்கைகளை யணிந்துள்ள திருவடி யுடையவரே!, நமோ நம - நமஸ்காரம் நமஸ்காரம், தீர - தைரியத்தை யுடையவரே!, சம்ப்ரம - சம்பிரமமுடையரே!, வீரா - சிறந்த வீரரே!, நமோ நம - நமஸ்காரம் நமஸ்காரம், கிரிராஜ - மலைகளுக்கு நாயகரே!, தீப மங்கள ஜோதி - ஞானச் சுடர்விளக்காகிய அருட்பெருஞ்ஜோதியே!, நமோ நம — நமஸ்காரம் நமஸ்காரம், தூய அம்பல லீலா - பரிசுத்தமாகிய தகாராகாயத்தில் ஆனந்தத்தாண்டவம் புரிந்தருள்பவரே!, நமோ நம - நமஸ்காரம் நமஸ்காரம், தேவ குஞ்சரி பாகா - தெய்வயானையம்மையாரை ஓர் பாகத்தில் உடையவரே!, நமோ நம - நமஸ்காரம் நமஸ்காரம், அருள் தாராய் - அடியேனுக்குத் தேவரீருடைய திருவருளைத் தந்து அருளவேண்டும்.

## பொழிப்புரை.

இல்லையென்றிரக்கும் இரவலருக்கு இல்லையென்னாத ஈகையும், பற்பலவிதமான சம்பிரமத்தோடு கூடிய பூசையும், வேதாகமாதி அறிவு நூல்களையும் தேவார திருவாசகமுதலிய முத்தி நூல்களை ஓதியுணர்தலும், நற்குணங்களும், நல்லொழுக்கமும், நல்ல நீதிநெறிகளும், உயிர்

களிடத்தில் இரக்கமும், குருநாதனுடைய திருவடித்தாமரையை மறவாத தன்மையுமாகிய சிறந்த நற்குணங்களுடையவர் வாழ்கின்றதும், சத்த தீவினர்களால் புகழ்ப்படுகின்ற காவிரிநதியால் வளமுற்று விளங்குவதுமாகிய சோழமண்டலத்தில் மனத்தைக்கவரும் வனப்புடைய ராஜகெம்பீர வள நாட்டினை அரசாளும் நாயகரே!, அந்நாட்டில் மிகவும் சிறப்புடன்விளங்கும் வயலூரில் வாழ்பவரே!, தம்மிடத்து மிகவும் அன்பு பொருந்திய சுந்தரமூர்த்தி சுவாமிகளது நட்பைப்பெற்று, அப்பெருந்தகையார் திருக்கைலாயத்திற்குப் புறப்பட்டபோது அவருடனேயே, முன்னளில் வெப்பத்தோடுகூடி நடக்கும் குதிரையின் மீது ஏறி பெருமை பொருந்திய திருக்கைலாயமலைக்குச் சென்று, திருக்கைலாச ஆதிஉலா என்னும் பிரபந்தத்தை அங்கு ஆசுகவியாகப் பாடியருளிய சேரமான்பெருமாள் நாயனர் அரசுசெய்யும் பேற்றைப் பெற்ற கொங்குதேயத்தில் நல்ல காவூர் நாட்டிலுள்ள திருவாவினன் குடி என்னும் திவ்வியக்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ளவரே! தேவர்கள் பெருமானே! நாதம் விந்து கலை என்பவைகட்கும் அப்பாற்பட்டிருப்பவரே! நமஸ்காரம் நமஸ்காரம், வேத மந்திர சொரூபரே! நமஸ்காரம் நமஸ்காரம், ஞானபண்டிதரே! நமஸ்காரம் நமஸ்காரம், அநேக கோடி திருநாமங்களையுடையவரும் சுககாரணருமாகிய சிவபெருமானுடைய திருக்குமாரரே! நமஸ்காரம் நமஸ்காரம், வினைப்பயன்களைத் துய்க்கச்செய்யும் போகசத்தியாகிய சிவகாமியம்மையாரது திருப்புதல்வரே! நமஸ்காரம் நமஸ்காரம், கால்களில் அரவங்கள் சுற்றப்பட்டுள்ள மயிலை வாகனமாக உடையவரே! நமஸ்காரம் நமஸ்காரம், பகைத்து வந்த சூரபன்மன் முதலிய அசுரசேனைகளை அழித்துத்தண்டித்தருளிய திருவிளையாடலைப்புரிந்தவரே! நமஸ்காரம் நமஸ்காரம், இனிய வொலியையுடைய தண்டை சதங்கைகளை யணிந்துள்ள திருவடிக்கமலங்களையுடையவரே! நமஸ்காரம் நமஸ்காரம், தீரமும் சம்பிரமமும் வீரமுமுடையவரே! மலைகளுக்கு நாயகரே! ஞானதீபமாகத் திகழ்பவரே! அருள்வெளியில் ஆனந்தக்கூத்தாடுபவரே! நமஸ்காரம் நமஸ்காரம், தெய்வயானையம்மையாரை ஓர்பாகத்தில் கொண்டவரே! நமஸ்காரம் நமஸ்காரம், அடியேனுக்குத் தேவரீருடைய திருவருள்தந்தருள்வீர்.

## விரிவுரை.

**நாத விந்து கலாதீ:—**

இறைவனது சத்தி அளவிடப்படாத நுண்மையும் ஆற்றலும் வாய்ந்ததாகலின், அஃது இவ்வுலகங்களுக்கு முதலான அசுத்த



மாயையை, நேரே சென்று பொருந்தி இயக்குமாயின், அவ்வசுத்த மாயை, அச்சத்தியின் வேகத்தைத் தாங்கமாட்டாமையின் இவ்வுலகங்கள் தோன்ருவாம்; அதுபற்றி அச்சத்தி நுண்பொருளியல்பில் ஒருவாற்ருல் தன்னோடு ஒத்தும், பருப்பொருளியல்பில் ஒருவாற்ருல் அசுத்த மாயையோடு ஒத்தும், நடுநிலையாய் நிற்கும் சுத்த மாயை எனப்படும் விந்து சத்தியோடு நேரே பொருந்தி நின்று, தனது வேகத்தை அதன்வாயிலாக அசுத்தமாயை தாங்குமளவாக வைத்துத் தணிவுபடுத்திப், பின்னர் அவ்வசுத்த மாயையை இயக்கி, இவ்வுலகங்களையும் இவ்வுலகத்துப் பல்பொருள்களையும் தோற்றுவிக்கும். எனவே சிவசத்தி நேரே சென்று இயைந்துநிற்குமிடம் விந்து என்பது அறியப்படுகிறது.

இனிச் சிவசத்தியால் உந்தப்பட்ட விந்துமாயை, சொல்லொணு இயக்கம் உடைத்தாய்ச்சுழல, அதன்கணின்றும் ஒரு நாதம் உண்டாம்; அந்நாதம் அசுத்தமாயையின் அணுக்களைத்திரட்டி உலகங்களை படைக்கும். சிவசத்தியால் இயக்கப்பட்ட விந்து சுழிந்து இயங்குங்கால் வட்டவடிவும், அவ்வட்டவடிவினின்று தோன்றும் நாதம் வரிவடிவும் உடையவாம். இவ்விந்துநாதங்களின் சேர்க்கையைத்தான், "உ" பிள்ளையார்சுழியென முதல் உலகதோற்றத்திற்குக் காரணமென்பதைப் புலப்படுத்த முதலில் இடப்படுகின்றது. இதன் அறிகுறியே சிவலிங்கமுமாம்.

இனிக் கலையென்பது ஐந்து வகையாகும்; அவை நிவிர்த்திகலை, பிரதிட்டாகலை, வித்யாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலை யென்பன. இவற்றுள்:—(1) நிவிர்த்திகலையென்பது: தன்கட்சேர்ந்த பக்குவர்கட்குச் சங்கற்பங்களை விடுவித்து மீட்கும்; அதனுல் நிவிர்த்தியெனப் பெயர்பெற்றது; இதற்குத்தேவதை பிரமதேவர். (2) பிரதிட்டாகலை யென்பது: தன்னையடைந்த ஆன்மாக்கட்கு முற்சொன்ன சங்கற்ப விகற்பங்களை விஷேடித்து நிறுத்தும்; இதற்குத் தேவதை திருமால். (3) வித்தியாகலை யென்பது: வித்தியா யென்பதற்கு அறிவு என்று பொருள்; தன்னையடைந்திருக்கும் ஆன்மாக்களின் அறிவைப் பிரகாசிக்கச்செய்யும்; இதற்குத் தேவதை உருத்திரமூர்த்தி. (4) சாந்தி கலையென்பது: சாந்தியென்பதற்கு சாந்தத்தன்மையென்று பொருள்; இது தன்னைச்சார்ந்த உயிர்கட்கு விருப்பு வெறுப்பை யொழித்து சங்கற்பவழிச் செல்லவொட்டாது முதன்மையான சாந்தத்தை விளைவித்

கும்; இதற்குத் தேவதைமகேச்சுரர். (5) சாந்தியதீதகலையென்பது: சாந்திக்கு மேலாய பரமஞானத்தையுண்டாக்கும்; இதற்குத் தேவதை சதாசிவமூர்த்தி. இவ்வைந்து கலைகளின் நிறம், குணம், அவத்தை, நாடி, வாயு, என்பவற்றின் விரிவை மதங்க ஆகமம் காலோத்தராதி களிற் கண்டு தெளிக.

எனவே மேற்போந்த விந்து நாதம் கலைகளைத் தாண்டிநிற்பது சுப்ரமண்யபரப்ரம்மம்.

"விந்து நாத ஓசைக்குத் தூரமானது"
—திருப்புகழ்,

நாதவிந்து கலாதீதா என வரவேண்டியது, சந்தத்தையொட்டி கலாதீ எனத்தாகாரங் கடைக்குறையாயிற்று
வேத மந்த்ர சொரூபா :—

"அப்ரமேய மரூப மவ்யத்தப்" என்று வடமொழி வேதமும், "உருவன்று அருவன்று" என்று தமிழ்வேதமுங் கூறியிருக்க, சுப்ர மண்ய பரப்ரமத்திற்கு மந்திரவடிவும் மாயாவடிவும் இல்லையென்பது மலையிலக்காக இருப்பவும், ஈண்டு "மந்த்ர சொரூபா" என்று கூறி மந்திர வடிவுடையவன் என்று விளக்குங் காரணம் யாதோ? எனின் கூறுதும்.

குமாரக்கடவுளுக்கு உண்மையில் வடிவமில்லையாயினும் ஆன்மாக் களின் தியானபூசாநிமித்தம் மந்திராதி வடிவங்களைத் தாங்குகின்றார். "அருவுமாகுவன் உருவமுமாகுவன் அருவும், உருவுமற்றதோர் தன் மையுமாகுவன்" என்று கந்தபுராணமும், "காணொணாதது உருவோ டருவது" என்று திருப்புகழும், "உருவாயருவாய்" என்று அநு பூதியும் தெரிக்குமாறு கண்டு தெளிக.

மந்திரமென்பதற்கு, மந் - நினைத்தல், திர - காப்பாற்றல், எனவே நினைப்பவரைக் காப்பது என்பது பொருள். இதுவேயுமன்றி, "மகா ரச்சைவ மாயாஸ்யாத் த்ருசப்தஸ தார கோபவேத்" என்று அசிதாக மங் கூறியவாறு, மா - மாயையை, த்ரா - விடுவித்தல், எனவே மாயை யைத் தாண்டுவிப்பது மந்திரமாதும் எனவும் பொருள்படும்.

ஆறுதாரத்தில் அடங்கியுள்ள அகாராதி க்ஷகாராந்தமாகவுள்ள ஐம்பத்தொரு அட்சரமே எல்லா மந்திரங்களினு முயர்ந்தது. இம் மந்திரத்தை மாத்ருகா மந்திரமெனவும், மாலாமந்திர மெனவும், மேளா மந்திரமெனவும் வேத சிவாகமங்கள் கூறின. "மாத்ருகா



புஷ்பமாலை கோலப்ரவாள பாதத்திலணிவேனே," எனவும் அருணகிரி யாரும் கூறியருளினர்.

மாத்ருகா மந்த்ராணாம் முக்ய பூதாப வேதிஹ
தச்சக்தி ருத்ர ஸம்யுக்தா: கேவலம் வாஸ மப்யஸேத்॥
—காமிகாகமம்.

இம்மந்திரம் ஐம்பது சத்தர்பேதங்களோடும், அத்துணைச் சத்தி பேதங்களுடனும் விளங்காநிற்கும் இவ்வைம்பத்தொரு எழுத்துக் களையே குகப்பெருமான் தமக்கு வடிவாகக்கொண்டு விளங்குவர். அதன் விவரம் வருமாறு:

अ (அ) - தலை, आ (ஆ)-நெற்றி, इ (இ) - வலக்கண், ई (ஈ) - இடக்கண், उ (உ) - வலச்செவி, ऊ (ஊ) - இடச்செவி, ऋ (று) - வலக்கபோலம், ॠ (றூ) - இடக்கபோலம், ऌ (லு) ॡ (லூ) - என் பன நாசிகள், ए (ஏ) மேலுதடு, ऐ (ஐ) - கீழுதடு, ओ (ஓ) औ (ஔ) என்பன மேலுங் கீழுமுள்ள பற்கள், अं (அம்) अः (அஹா) என் பன முகங்கள், क (க1) ख (க2) ग (க3) घ (க4) ङ (ங) - என்பன வலத் திருக்கரங்கள், च (ச1) छ (ச2) ज (ச3) झ (ச4) ञ (ஞ) என்பன இடத் திருக்கரங்கள், ट (ட1) ठ (ட2) ड (ட3) ढ (ட4) ण (ண) என்பன வலப்பாதங்கள், त (த1) थ (த2) द (த3) ध (த4) न (ந) என்பன இடப் பாதங்கள், प (ப1) வயிறு, फ (ப3) ब (ப3) வலப்பாரிசம் இடப்பாரி சம், भ (ப4) கந்தம், म (ம) இருதயம், य (ய) र (ர) ल (ல) व (வ) श (ச) ष (ஷ) स (ஸ) என்பன சத்ததாதுக்கள், ह (ஹ) ஆன்மா, ळ (ள) क्ष (க்ஷ) என்பன உபசாரங்கள்; இவ்வாறாகத் திருவுருவங் கொண்டு சொற்பிரபஞ்சங்களையெல்லாம் இயக்காநிற்பர்.

பெருமானுக்குப் பஞ்சாக்கர வடிவமும் உளது என்பதனை:

ஆடும்படி கேணல் லம்பலத்தா னையனே
நாடுந் திருவடியி லேநகரம்—கூடும்
மகர முதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்

என்னும் உண்மை விளக்கத்திருவிருத்தத்தாலுணர்க.

ஞானபண்டித ஸ்வாமீ :—

முருகப்பெருமான் ஞானமூர்த்தி என்பதும், ஞான தாதா என்பதும், ஞானசாரியன் என்பதும், ஞான சொரூபன் என்பதும் அடியிற்கண்ட பிரமாணங்களாலறிக.

" குருமலை விளங்கு ஞானசற் குருநாதா "

" குருகடாக்ஷ கலா வே தாகம
பரமவாக்கிய ஞானசாரிய
குறைவு தீர்த்தருள் ஸ்வாமீ "

—திருப்புகழ்.

" ஞானந்தா னுருவாகிய நாயக னியல்பை
யானு நீயுமா யிசைத்து மென்றலஃ தெளிதோ "

— கந்தபுராணம்.

வெகு கோடி நாம சம்பு :—

ஒரு நாமமுமில்லாத அப்பரமபதி, ஆன்மாக்களின்பொருட்டு பற்பல ஆயிரந் திருநாமங்களைத் தாங்கி யருள்புரிகின்றார்.

" ஒருநாம மோருருவ மொன்று மிலார்க் காயிரமாந்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ "

—திருவாசகம்.

" பேராயிரம் பரவி வானோ ரேத்தும்
பெம்மானை "

—அப்பர்.

கிரிராஜ :—

முருகக்கடவுள் குறிஞ்சிநிலக்கடவுளாதலால் மலைக்கு நாயகன் என்றார். " மலைக்கு நாயக " என்று திருக்கோணமலைத் திருப்புகழிலும் கூறியுள்ளார்.

தீபமங்கள ஜோதீ :—

அருட்பெருஞ்ஜோதியாண்டவர் அறுமுகக்கடவுளே என்பதை பிறிதொரு பாடலிலும் விளக்குகின்றார்.

நிர்த்த ஜெக ஜோதிப் பெருமாளே

— திருப்புகழ்.

தூய அம்பல லீலா :—

ஆன்மாக்களினது இதைய புண்டரீகத்திலுள்ள தகாராகாயத்தில் குகப்பெருமான் ஓவாது நடனம் புரிந்துகொண்டிருக்கின்றார். அவ்



விருதய வெளியை பரவியோமம், சிதம்பரம், சிதாகாசம், தகாராகாசம், சிற்றம்பலம், ஞானம்பரம், அந்தராகாசம், எனப் பலபெயர்களால் சுருதிகளுரைக்கும்.

" அணோரணியாந் மஹதோ மஹீயாந் ஆத்மா
குஹாயாம் நிஹிதோஸ்ய ஜந்தோ "

என்னும் மந்திரோப நிடதத்தாலும் மேற்போந்த விஷயம் நன்கு வலியுறுத்தப்படுமாறு காண்க.

ஈதலும் . . . . மறவாத :—

மனுநீதிச் சோழன் அரசுசெய்யும் பாக்கியத்தைப்பெற்ற சோழமண்டலத்திலுள்ளோர், ஈகை, பூஜை, கல்வி, குணம், ஒழுக்கம், நீதி, கருணை, குருசேவை இவைகளுடன் கூடிய உத்தமர்கள் என்பதை மிகவும் அழகாகக் கூறுகின்றார்.

ராஜ கெம்பீர நாடு :—

ராஜகெம்பீரநாடு என்பது வயலூரைச் சூழ்ந்துள்ள நாடு; வயலூரைச் சூழ்ந்துள்ள அந்நாட்டில் சாசனங்கள் எழுதும்போது ராஜ கெம்பீரநாடு என எழுதுவதை இக்காலத்திலும் காணலாம்.

ஆதரம்பயில் . . . . சேரர் :—

## சேரமான்பெருமாள் நாயனார் உலாப்பாடிய வரலாறு.

மலைநாட்டிலே மகோதையென்னும் பெயரையுடைய கொடுங்கோளூரிலே, சேரர் குடியிலே, பெருமாக்கோதையார் என்னும் சற்புத்திரர் ஒருவர் தோன்றினார். அவர் இளமையிலேயே வைராக்கிய முற்று சிவபக்தி மிகுந்து, இராஜ கருமத்தை வெறுத்து, திருவஞ்சைக்களத்திலே திருவாலயத்தொண்டினை அன்புடன் செய்வாராயினார்.

அக்காலத்திலே செங்கோற் பொறையன் என்னும் சேர மகாராஜன் துறவறத்தை மேற்கொண்டு, தவவனம் அடைந்தான். மந்திரிமார்கள் திருவஞ்சைக்களம் போந்து, பெருமாக்கோதையாரை வணங்கி, அரசராகும்படி வேண்ட, அவர் சிவாக்ஞை மேற்கொண்டு கழறினவற்றை யறியும் அறிவையும், அழிவில்லாத ஆற்றலையும், பெருங்கொடையையும், பற்பல படைகளையும், பக்திநெறி வழுவாமல் அரசியற்றும் ஆண்மையையும் சிவபெருமான்பால் பெற்று வணங்கி

2

விடைபெற்று, நல்ல சுபதினத்திலே முடிசூடி, சிவாலயத்தைவணங்கி யானைமீதூர்ந்து வெண்கொற்றக்குடைநிழற்ற, வெண்சாமரமிரட்ட, சகல விருதுகளுடனும் பவனிவரும்போது, ஒரு வண்ணான் உவர்மண்ணைச் சுமந்துவர, மழையினாலே கரைந்த உவர்மண் அவ்வண்ணானுடம்பில் விபூதிபோல் தோன்ற; அதுகண்ட பெருமாக்கோதையார் என்னும் சேரமான்பெருமாணயனார், உடனே யானையினின்றுமிறங்கி விரைந்துபோய் வணங்கினார். அதுகண்ட வண்ணான் நடுநடுங்கி, அவரை அடிவணங்கி, "அண்ணலே! "அடியேன் அடிவண்ணான்" என்று சொல்ல; சேரமான்பெருமாணயனாரும் 'தேவரீர் திருநீற்று வடிவத்தை நினைப்பித்தீர்; அடியேன் அடிச்சேரன் வருந்தாதீர்போம்" என்று சொல்லியருளினார். அவருடைய அடியார் பக்தியைக்கண்ட மந்திரிமார்கள் முதலியோர், மிகவும் இருப்பூதுற்று இறைஞ்சினார்கள். சேரமான்பெருமாள் நாயனார் நாள்தோறும் செய்யும் பூசைமுடிவிலே நடராஜப்பெருமானுடைய சிலம்பொலி கேட்கும். அடியாருக்கும் மிடியாருக்கும் பொன்மாரி பொழிந்துவருவார். சிவபெருமான்கொடுத்தனுப்பிய திருமுகப்பாசுரத்தை சென்னிமேற்கொண்டு வணங்கி, அத்திருமுகங்கொண்டுவந்த பாணபத்திரருக்கு அளப்பில்லாத அரதனங்களை நல்கி உபசரித்தார்.

ஒருநாள் பூஜாந்தரத்திலே, சபாநாதருடைய சிலம்பொலி கேளாதொழிய; சேரமான்பெருமாள் நாயனார் மனமயங்கி, அடியேன் யாதுபிழை செய்தேனோ? இனி இந்த உடம்பை ஒழிப்பேன்" என்று வாள்கொண்டு உயிர்விடத்துணியும்போது, உடனே சபாநாயகர் சிலம்பொலிகேட்கச் செய்து "அன்பனே! சுந்தரமூர்த்தியின் பாடலைக் கேட்டு வரத்தாழ்ந்தோம்" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய பெருமையை வெளிப்படுத்தினார். சேரமான்பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்திசுவாமிகளுடைய பெருமையையும், அவர் அருட்பாடலின் அருமையையும், கனகசபாபதி அடியார்க்கருளும் கருணையின் திறத்தையும் நினைந்து நினைந்து நெஞ்சம் நெகிழ்ந்து, சுந்தரமூர்த்தி சுவாமிகளை தெரிசிக்கும் ஆவல்கொண்டு, திருவாரூர் போந்து வன்றொண்டரை வணங்கி, வன்மீகநாதர்மீது மும்மணிக்கோவையையும், சபாநாதர்மீது பொன்வண்ணத்தந்தாதியையும், வேதாரணியர்மீது திருவந்தாதியையும் பாடி வழிபட்டார்.

பலநாட்களுக்குப் பின் சுந்தரமூர்த்திசுவாமிகளை தம்முடைய கொடுங்கோளூருக்கு அழைத்துச்சென்று, மிகவும் உபசரித்து அவருடன் மிக்கதோர் நட்புகொண்டு, தமது பண்டாரத்திருந்த செல்வமுழுவதையுங்கொடுத்து ஆரூருக்கு அனுப்பினார்; அவரை மறவாது அரசு செய்து வந்தார். பின்னர் ஒரு சமயம், அந்திவண்ணனைத் தூது கொண்ட சுந்தரமூர்த்திநாயனார். கொடுங்கோளூருக்கு வந்து சேரமான் பெருமாள் நாயனாருடன் எழுந்தருளியிருந்தார். பலநாளாயின பின் சுந்தரமூர்த்தி நாயனார் திருவஞ்சைக்களஞ்சென்று சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு இருந்தபோது, திருக்கைலாயத்தினின்றும் சிவபெருமானால் அனுப்பப்பட்ட வெள்ளையானையின்மேல் ஏறி, "இந்திரன் மால் பிரமன் எழிலார் மிகுதேவர் எல்லாரும் வந்து எதிர்கொள்ள"ச் செல்லும்போது, தனது அருமைத்தோழராகிய சேரமான் பெருமாள் நாயனாரை நினைத்தார். நீராடிக்கொண்டிருந்த சேரமான் பெருமாள் நாயனார், தம்பிரான்தோழருடைய நினைவையுணர்ந்து உடனே அருகிலேநின்ற குதிரைமீது ஏறி, திருவஞ்சைக்களஞ் சென்று, ஐராவணமூர்ந்து ஆகாயத்திற் செல்லும் ஆரூரடிகளைக்கண்டு தாம் ஏறிய குதிரையின் செவியிலே ஐந்தெழுத்தை ஓதியருளினார். உடனே அக்குதிரை ஆகாயத்திற் பாய்ந்து, நம்பியாரூருடைய வெள்ளையானையையடைந்து அதனை வலஞ்செய்து அதற்குமுன்னாகச் சென்றது. சேரமான்பெருமாள் நாயனாருடைய படைவீரர்கள், குதிரைமேற்செல்லும் அந்நாயனாரைத் தங்கள் கண்ணுக்குப் புலப்படும் எல்லைவரைக்கும் ஆகாயத்திலே கண்டு, பின் காணாமையால் மிகுந்த திடபத்தியால் உடைவாள்கொண்டு தங்கள் உடம்பைவீழ்த்தி வீரயாக்கையைப் பெற்றுப்போய், சேரமான்பெருமாள் நாயனாருக்கு முற்பட்டு, அவரை வணங்கிக்கொண்டு சென்றார்கள். சேரமான்பெருமாள் நாயனாரும், சுந்தரமூர்த்தி நாயனாரும், உள்ளுவார் வினையகற்றும் வெள்ளியம் பொருப்பை நண்ணியவுடனே, குதிரையினின்றும் யானையினின்றும் இறங்கி, பலவாயில்களையுங் கடந்து, திருவணுக்கன் திருவாயிலையடைந்தார்கள். அங்கே சேரமான்பெருமாள் நாயனார் தடைப்பட்டு நிற்க; சுந்தரமூர்த்தி நாயனார் உள்ளேபோய் சிவசந்நிதியில் நிலத்தில் விழுந்துவணங்கி எழுந்து துதித்துநின்று, "எந்தையே! தேவரீருடைய திருவடிகளை அடையும்பொருட்டுச் சேரர்கோன் திருவணுக்கன் திருவாயிலையடைந்து நிற்கின்றார்" என்று விண்ணப்பஞ் செய்தார். புரிசடைக்கடவுள் புன்முறுவல்செய்து சேரமான்பெருமாளை அழைப்பிக்க; அவர் ஆராத அன்புடன் விரைந்துசென்று பன்முறை விழுந்து வணங்கித் துதித்துநின்றார். செம்மேனிப்பெம்மான்

திருமுறுவல்கொண்டு "இங்கே நாம் உன்னை அழையாதிருக்க; நீ வந்தது என்னே? என்று அருளிச்செய்ய; சேரமான்பெருமாள் நாயனார், கைகூப்பி "பண்ணவர்போற்றுங் கண்ணுதற்கடவுளே! சுந்தரமூர்த்தி நாயனாருடைய திருவடிகளைத் துதித்து; அவர் ஏறிய வெள்ளை யானைக்குமுன் அவரைச் சேவித்துக்கொண்டுவந்தேன்; தேவரீர் பொழிகின்ற பெருங்கருணைவெள்ளம் அடியேனை இங்குகொண்டுவந்து ஒதுக்கியதால் திருமுன்வரப்பெற்றேன்; மலைமகள் நாயக! இனி ஒரு விண்ணப்பம் உண்டு; மாலயனாதி வானவர்களாலும் மாதவர்களாலும் மறைகளாலும் துதிக்கப்படுதற்கு அரிய பெருமையுடைய தேவரீர் மீது அன்பினாலே தேவரீரது திருவருள்துணைகொண்டு திருவுலாப் பாடினேன்; அதனைத் தேவரீர் திருச்செவி சாத்தியருளவேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தார். அப்பொழுது சிவபெருமான் "சேரனே! அதனைச்சொல்லு" என்று திருவாய்மலர்ந்தருள; சேரமான்பெருமாள் நாயனார் உடனே திருக்கைலாச ஞானவுலாவை ஆசுகவியாகப் பாடிப் பெருமானைக் கேட்பித்தார். அரனார் மகிழ்ந்து அருள்செய்து, "நம்முடைய கணங்களுக்கு நாதனாய் இரு" என்று அருள்புரிந்தார். சேரமான்பெருமாள் நாயனார் சிவகணநாதராகிச் சிவமூர்த்தியைச் சேவிப்பாராயினர். அவர் அருளிச்செய்த ஞானவுலாவை அங்கு அன்று கேட்ட மகாசாத்தர், தமிழ் நாட்டிலேயுள்ள திருப்பிடவூரிலே அதனைக்கொணர்ந்து வெளியிட்டு, உலகில் விளங்க நாட்டியருளினர்.

## கருத்துரை.

மேன்மை பொருந்திய சோழமண்டலத்திலுள்ள ராஜ கெம்பீர நாட்டிற்கரசே! வயலூரா! சேரநாட்டிலுள்ள பழநியில் வாழும் பரம பதியே! தேவரீருக்குப் பலப்பல நமஸ்காரம்; அருள்புரிவீர்.

---

## உபதேசம்.

எல்லா வுயிர்களும் இறைவனுடைய கோயில்களே; உயிர்கள்தோறும் இறைவன் உயிர்க்குயிராய் இருந்து திருநடனம்புரிகின்றார்; ஆதலால், எல்லா வுயிர்களிடத்திலும் அன்பாயிரு; உயிர்களிடத்தில் செய்யும் அன்பு இறைவனைச் சாரும்; உயிர்களை நேசிப்பது இறைவனை நேசிப்பதாகும்; இறைவனை நேசித்து உயிர்களை வெறுத்தால் (கொன்றால்) இறைவனருளைப்பெற முடியாது; "படிப்பது தேவாரம் இடிப்பது சிவன்கோயில்" என்ற வசனத்தை உன்னுக. உயிர்களின் துன்பத்தை நீக்க உன்னுயிரைத் துரும்பாக எண்ணு; இதுதான் மோக்ஷ உலகத்திற்குச் சிறந்த வழி.

ஓம் ஸுப்ரஹ்மண்யாய நம:

# ॥ शिवानन्दलहरी ॥

## சிவானந்த லஹரீ

(ஆதிசங்கரர் அருளிச் செய்தது)

(108-வது பக்கத் தொடர்ச்சி)

असारे संसारे निजभजनदूरे जडधिया
भ्रमन्तं मामन्धं परमकृपया पातुमुचितम्।
मदन्यः को दीनस्तव कृपणरक्षातिनिपुण-
स्त्वदन्यः को वा मे त्रिजगति शरण्यः पशुपते ॥ १३ ॥

(13) அஸாரே ஸம்ஸாரே நிஜப$^{4}$ஜனதூ$^{3}$ரே ஜட$^{3}$தி$^{4}$யா
ப்$^{4}$ரமந்தம் மாமந்$^{4}$தம் பரமக்ருபயா பாதுமுசிதம் ।
மத$^{3}$ன்ய: கோ தீ$^{3}$னஸ்தவ க்ருபணரக்ஷாதி நிபுண-
ஸ்த்வத$^{3}$ன்ய: கோ வா மே த்ரிஜக$^{3}$தி சரண்ய: பசுபதே ॥

## பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| பசுபதே | - ஆன்மாக்களுக்குப் பதியே. | உசிதம் | - தகும், |
| அஸாரே | - ஸாரமற்றதாயும், | தீன: | - எளியவன், |
| நிஜபஜனதூரே | - தியானத்திற்கு வெகு தூரமாயுமிருக்கின்ற, | மதன்யம் | - அடியேனை விட வேறு எவன், |
| ஸம்ஸாரே | - பிறப்பிறப்பாகிய ஸம்ஸாரத்திலே, | தவ | - தேவரீருக்கு, |
| ஜடதியா | - நன்மை தீமையறியாதமந்தபுத்தியால், | க: | - இருக்கின்றான், |
| ப்ரமந்தம் | - சுழல்கின்றவனாயும், | க்ருபணரக்ஷாதி நிபுண: | - ஏழைகளைக் காப்பாற்றுவதில் மிகவும் வல்லமை பொருந்திய, |
| அந்தம் | - குருடனாயுமிருக்கின்ற, | த்வதன்ய | - தேவரீரைவிடவேறு, |
| மாம் | - அடியேனை, | மே | - அடியேனுக்கு, |
| பரமக்ருபயா | - தேவரீருடைய மேலான கருணையால், | சரண்ய: | - அண்டினவர்களைக் காக்கும் சக்தியுடையவனாக, |
| பாதும் | - காப்பாற்ற, | த்ரிஜகதி | - மூவுலகங்களிலும், |
| | | கோவா | - யார்தா னிருக்கின்றார், |

## பொழிப்புரை.

ஓ பசுபதே! தேவரீருடைய புகழைத் துதிப்பதையொழிந்து, சாரமற்ற சமுசாரத்திலே கிடந்துழலும், அறிவற்றவனாகிய அடியேனைக் கருணையுடன் காப்பாற்றுதல் உசிதமாகும்; அடியேனைக்காட்டிலும் எளியவர்கள் உலகில் வேறு யாருளர்? தேவரீரைவிட எளியவர்களைக் 'காக்கவல்லவர் மூன்றுலகங்களில் வேறு ஒருவருமில்லையல்லவா?

“வம்பனேன் தன்னை யாண்ட மாமணியே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்”
“மற்றுப் பற்றெனக் கின்றிநின்திருப் பாதமே மனம் பாவித்தேன்”
“என்றனுக் குற்றதுணை உனையன்றி வேறுமில்லை”
“உன்றனக்கே பாழும் என்றனக்கார் துணைவர்”

என்ற தமிழ் வேதங்களை இதனோடு இணைத்து நோக்குக.

प्रभुस्त्वं दीनानां खलु परमबन्धुः पशुपते
प्रमुख्योऽहं तेषामपि किमुत बन्धुत्वमनयोः ।
त्वयैव क्षन्तव्याः शिव मदपराधाश्च सकलाः
प्रयत्नात्कर्तव्यं मदवनमियं बन्धुसरणिः ॥ १४ ॥

(14) ப்ரபு$^4$ஸ்த்வம் தீ$^3$னானாம் க$^2$லு பரமப$^3$ந்து$^4$: பசுபதே
ப்ரமுக்யோ ऽஹம் தேஷாமபி கிமுத ப$^3$ந்து$^4$த்வமனயோ:।
த்வயைவ க்ஷந்தவ்யா: சிவ மத$^3$பரா$^4$தா$^4$ச்ச ஸகலா:
ப்ரயத்நாத் கர்த்தவ்யம் மத$^3$வனமியம் ப$^3$ந்து$^4$ ஸரணி: ॥

## பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| பசுபதே | - சர்வேச! | அஹம் | - அடியேன், |
| ப்ரபு: | - எல்லாம் செய்ய வல்லவரான, | ப்ரமுக்ய: | - மிக்க முதன்மை (ஆதலால்), |
| த்வம் | - தேவரீர், | அநயோ: | - இந்த நம்மிருவர்களுக்குமுள்ள |
| தீனானாம் | - எளியவர்களுக்கு, | பந்துத்வம் | - உறவின் தன்மையை, |
| பரமபந்து:கலு | - முக்கியமான உறவினரல்லவா? | கிமுத | - சொல்லவேண்டியதென்ன? |
| தேஷாமபி | - அந்த எளியோர்களுக்குள்ளும், | சிவ | - மங்களகரரே! |



| | | | |
|---|---|---|---|
| ஸகலா: | - எல்லா விதங்களான, | ப்ரயத்னாத் | - முயற்சியெடுத்துக் கொண்டு, |
| மதபராதா: | - அடியேனுடையகுற்றங்களும், | கர்த்தவ்யம் | - செய்யத்தக்கது, |
| த்வயைவ | - உம்மாலேயே, | இயம் | - இதுதான், |
| க்ஷந்தவ்யா: | - பொறுத்துக்கொள்ளத்தக்கவைகள், | பந்துஸரணி: | - உறவினர்களுடைய வழி |
| மதவனஞ்ச | - அடியேனைக் காப்பாற்றுதலும் | | |

## பொழிப்புரை.

ஓ பசுபதே! சிவபெருமானே! எல்லாம் வல்ல சித்தரான தேவரீர் தீனர்களுக்குச் சிறந்த பந்துவல்லவா? அந்தத் தீனர்களில் அடியேன் முதல்வனுதலின், நமக்கு வேறு உறவைச் சொல்லவேண்டியதில்லையல்லவா? ஆதலின், அடியேன் செய்த எல்லாக் குற்றங்களையும் பொறுத்து அடியேனைக் காத்தருளல் தேவரீருக்குக் கடமையாகும்; இதுவே பந்துக்கள் செய்யும் வகை.

“ஏழைக்கிரங்கும் பெருமானே”
“எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சியேகம்பனே”

उपेक्षा नो चेत्किं न हरसि भवद्ध्यानविमुखां
दुराशाभूयिष्ठां विधिलिपिमशक्तो यदि भवान् ।
शिरस्तद्वैधात्रं ननखलु सुवृत्तं पशुपते
कथं वा निर्यत्नं करनखमुखेनैव लुलितम् ॥ १५ ॥

(15) உபேக்ஷா நோசேத்கிம் ந ஹரஸி ப$^4$வத்$^3$யான விமுகாம்
து$^3$ராசாபூயிஷ்டாம் விதி$^4$ லிபிமசக்தோ யதி$^3$ ப$^4$வான்।
சிரஸ்தத்$^4$வைதா$^2$த்ரம் நநகலு ஸுவ்ருத்தம் பசுபதே
கத$^2$ம் வா நிர்யத்நம் கரநக$^2$ முகேநைவ லுலிதம் ॥

## பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| பசுபதே | - சர்வேச, | நோசேத் | - இல்லாதிருந்தால், |
| உபேக்ஷா | - அடியேனைக் காக்கும் விஷயத்தில் தேவரீருக்கு, வெறுப்பு, | துராசாபூயிஷ்டாம் | - கெட்ட ஆசையால் நிறைந்ததாயும், |

| | |
|---|---|
| பவத்யான விமுகாம் | தேவரீருடைய தியான்த்தி விருந்து வேருசவுமிருக்கின்ற, |
| விதிலிபிம் | பிரமனுடைய (தலை) எழுத்தை, |
| கிம் | என், |
| ஹரவி | போக்கடிக்கின்றுயில்லை, (அழிக்கின்றுயில்லை), |
| பவான் | தேவரீர், |
| அசக்தோயதி | அப்படி அழிக்கச் சக்தி யற்றவராயிருந்தால், |
| நநகலு | நகத்தினல்கிள்ளக் கூடாததாயும், |
| ஸுமஹ்ருத்தம் | மிகக் கடினமாகவுமிருக்கின்ற, |
| தத் | அந்த, |
| வைதாத்ரம் | பிரமனுடைய, |
| சிர: | தலையானது, |
| நிர்யத்நம் | முயற்சியின்றி, |
| அதம்வா | எவ்விதமாகத் தான், |
| கரநகமுகேநைவ | கைநகத்தின் நுனியினலேயே, |
| லுலிதம் | கிள்ளப்பட்டது, |

## பொழிப்புரை.

ஓ பசுபதே! என்னை காத்தருள்வதில் தேவரீருக்கு வெறுப்பு இல்லாமலிருந்தால், தேவரீரது திருவடித்தாமரையை நினைக்வாட்கொடாத அடியேனுடைய தலையெழுத்தை என் அழிக்கவில்லை? அவ்வாறு அழிக்க உமக்கு ஆற்றலில்லையோ? கிள்ளமுடியாத திண்மையுடைய அந்த அயனுடைய தலையை நகநுனியால் முயற்சியின்றி கிள்ளியெறியவில்லையோ? ஆற்றலில்லையென்று எப்படிச்சொல்லலாம்?

நல்ல மலரின்மேல் நான் முகனர் தலை
ஒல்லை யறிந்த தென் றுந்தீபற
உகிரா லறிந்த தென்றுந்தீபற

— திருவாசகம்.

(தொடரும்.)

---

இரை தேடுவதோடு இறையையுந்தேடு.

—பாம்பனடிகள்.

உ

ஓம் குஹாய நம:

# கந்தர் திருவிளையாடல்

(114-வது பக்கத் தொடர்ச்சி)

முழுதொருங்குணர்ந்த முருகப்பெருமான் தமது சாரதியாகிய வாயுதேவனை நோக்கி, "மனதினும் விரைந்து செல்லும்வண்ணம் தேரைச் செலுத்துவாயாக" என்று பணித்தருள, வாயுதேவன் "நன்று" என்று வணங்கி, தன்னினமாகிய வாயுக்கள் புடைசெல்ல, குதிரைகளைத்தூண்டி ஆர்த்தான். அப்பொழுது விண்ணும் மண்ணும், மலைகளும், கடல்களும் திசைக்கரிகளும் நடுங்கின; குமாரக்கடவுளுடைய தேர் இவ்வாறு ஆகாயமார்க்கமாகச் சென்றது; பூதசேனைகள் அவரைச் சூழ்ந்து சென்றன; போரிலே தோற்றோடிய பூதர்கள் எல்லோரும் முருகக்கடவுளைத் தரிசித்தவுடனே வணங்கிக்கொண்டு ஆற்றலோடும் அவரைச்சூழ்ந்துசென்றார்கள்; பற்பல வாத்தியங்கள் முழங்கின; விண்ணிடையிருந்த வானவர்கள் மகிழ்ந்தார்கள்; இவ்வாறு எம்பெருமான் தாரகனுடைய அமர்க்களத்தையடைந்தார். பூதர்களும் அசுரர்களும் பொருதார்கள்; பூதர்களால் அசுரர் பலர் மாண்டனர்; மற்றவர்கள் அனைவரும் வலியற்றுத் தோற்று ஓடினார்கள்.

தாரகன் தன் சேனைகள் தோல்வியடைந்தமையை நோக்கி, வில்லை வளைத்து பல பாணங்களைத் தொடுத்துக்கொண்டு நடந்து, தன்னெதிர்ந்த கணநாதர்கள் எல்லாரையும் பலபாணங்களைச்சொரிந்து துரந்துகொண்டு, அம்பிகை தந்த அறுமுகவள்ளலின் திருமுன் அடைந்தான். அடைந்தவுடனே சிந்தையின்கண்ணே சினமென்னுந் தீமூளத் தூதர்களை நோக்கி, "இவன்றானே சிவனுடைய குமாரன்?" என்று வினவ, தூதர்கள் "ஆம் அரசனே" என்றார்கள். உடனே நீதிநெறியற்ற தாரகன், தேரை விரைந்து செலுத்திக்கொண்டு, குமாரசுவாமி திருமுன்சென்று பூரணசந்திரனையொத்த ஆறு திருமுகங்களையும், அருளொழுகும் பன்னிரண்டு திருக்கண்களையும், வேலாயுதத்தையும், ஏனைய படைக்கலங்களையும், பன்னிரண்டு திருக்கரங்களையும், அழகிய நவரத்தினத்தண்டை ஒலிக்கும் திருவடித்தாமரைகளையும் கண்டான்.

முழுமதி யன்ன வாறு முகங்களு முன்னுன் காதும்
விழிருளி வருளும் வேலும் வேறுள படையின் சீரும்
அழகிய காமீ ராறு மணிமணித் தண்டை யார்க்குஞ்
செழுமல ரடியுங் கண்டா னவன்தவஞ் செப்பற் பாற்றே.

தாரகன் இவ்வாறு சிற்பரமூர்த்தியாகிய செவ்வேட்பெருமானுடைய திருவுருவனைத்தையும் நோக்கி, அற்புதமடைந்து, "இவன் நம்மேலே போர்செய்ய வந்தான் என்றால் கற்பனைகடந்த ஆதிக்கடவுளே போலும்" என்று தனக்குள்ளே சொல்லி, யாவர்க்கும் முதல்வராகிய சிவமூர்த்தி தமக்குத் தந்த வரத்தையும், வீரத்தையும், வன்மையையும், அளவற்ற செல்வத்தையும், நினைந்து பெருமிதமுற்றுக் கோபித்து, குமாரக்கடவுளை நோக்கி, "பாலனே! கேள்; நாரணன் நான்முகன் இந்திரன் முதலிய இமையவரே எமக்குப் பகைவர்; சிவபெருமான் எமக்குப் பகைவரல்லர்; ஆதலால், நீ போர்செய்யவந்த காரணம்யாது? சொல்லுதி" என்றான். முருகக்கடவுள் "தாரகனே! உயிர்கள்செய்யும் நல்வினை தீவினைகளுக்கேற்ப, அருளும் தண்டமும் செய்யும் முழுமுதற்கடவுளாகிய முக்கட்பெருமான் தேவர்களை நீங்கள் சிறையில்வைத்தமையைத் திருவுளங்கொண்டு, உங்கள் வீரத்தையும் வலியையும் அழிக்கும்பொருட்டு நம்மை விடுத்தருளினார்" என்று திருவாய்மலர்ந்தார். தாரகன், "கருடன்மீதுவந்து என்னை எதிர்த்துப் பொருத திருமாலினுடைய சக்கரப்படை என் கழுத்தில் ஆபரணமாயிருத்தலை நீ பார்க்கவில்லைபோலும்? இன்றுவரை எம்மோடு பகைத்தவர்களில் எம்மை வென்றவர் ஒருவருமில்லை; எல்லாரும் இறந்தும் தோற்றும் ஒழிந்தார்கள்; நீ என்மீது போர்செய்ய விடுத்த தலைவர்களை வென்று கிரௌஞ்ச மலையினுள் மாளும்வண்ணம் செய்தேன்; பிள்ளாய்! நீ என்னுடன் போர்செய்து வருந்தாது நின் தந்தையாகிய அந்திவண்ணன்பால் போய்விடு" என்றான்.

அறுமுகக்கடவுள், "தாரகனே! ததீசிமுனிவன்மீது விட்டுனு விடுத்த அச்சக்கரம் கூரிழந்து குயவன்கைச் சக்கரம்போலாயினதை நீ கேட்டிலையோ? படைக்கல நாயகமாகிய வேற்படை அதுபோல் பழியுறுமோ? உன்னுயிரையும் ஒரு கணத்திலுண்ணும்; சூரியனைக் கண்ட இருள்போல் நம்வரவால் உங்கள் வன்மை ஒழிமைப்பின் மாய்ந்தது. கள்வனே! மாயைக்கு இருப்பிடமாகிய கிரௌஞ்சவெற்பையும் உன்னையும் வேற்படையால் கொன்று, நமது சேனையை விரைவில் மீட்கின்றேம்" என்று மொழிந்தருளினர்.



உடனே தாரகன் கோபங்கொண்டு வில்லைவளைத்து நாணொலி செய்ய, தேவர்களும் தியக்கமுற்றார்கள். அப்பொழுது ஆறுமுகப் பெருமான் தமது திருக்கரத்திருந்த வில்லைவளைத்து நாணொலிசெய்தார். அதுகேட்டு அயனரி முதலியோரும் அஞ்சினார்கள்; உலகமெல்லாமேங்கின; தாரகனும் தலையசைத்தான்; அசுரப்படைகள் அஞ்சின; தாரகன் அளப்பில்லாத அம்புகளைத்தூண்ட, அறுமுகச் சிவனார் ஆயிரம் பாணங்களைத்தூண்டி அவற்றைத்துணித்தார். தாரகன் சினந்து பின்னும் ஆயிரங்கணைகளைத்தூண்ட, பரசிவகுரு பத்துக் கணைகளால் அவற்றை மாற்றினார். தாரகன் மீளவும் கணைகளை வில்லில்பூட்ட, கந்தவேள் ஒரு கணையைவிடுத்து அவன் வில்லைத் துணித்தார்; தாரகன் வேறொரு வில்லைவளைக்க, முருகவேள் ஆயிரம்பாணங்களைத் தாரகன்மீது விட்டார்; தாரகன் அவைகளை ஆயிரங் கணைகளால் நீக்கினான். தாரகன் கணக்கில்லாத கணைகளைத்தூண்ட, குமாரமூர்த்தி அவைகளை மாற்றி, கோடி பாணங்களையேவி அவன் உடம்பு முழுவதும் துளைத்தார்; தாரகன் கோபித்து இரண்டுகோடி பாணங்களை பெருமான்மீது விடுக்க, செவ்வேட்பெருமான் இரண்டு திவ்வியாத்திரங்களைச் செலுத்தி தாரகனுடைய தும்பிக்கையையும் முகத்திலுள்ள கொம்பையும் துண்டமாக்கினார்; அதனால் தாரகன் மனந்தளர்ந்து, நாணமும் மானமுமடைந்து, பெருங்கோபமுற்று, ஆயிரம் பாணங்களையேவி ஆறுமுகப்பெருமானுடைய தேரிலுள்ள கொடியை யறுத்துவீழ்த்தினான்; அதுகண்ட அறுமுகவள்ளல் எட்டுக்கணைகளைச் செலுத்தி தாரகனுடைய வில்லையறுத்து, ஆயிரம் அக்கினிக்கணைகளைச்செலுத்தி அவனுடைய தேரையும் பாகனையும் தேர்க்குதிரைகளையும் அறுத்துப் பாழ்படுத்தினார். தாரகன் வேறொரு தேரிலேறி ஐந்நூறு கனற்கணைகளைவிடுத்து முருகவேளுடைய தேர்ப்பாகனாகிய வாயுதேவன் புயத்தைப் புண்படுத்தினான்; அதனால் வாயுதேவன் வருந்தியதைக்கண்ட வடிவேலண்ணல் ஆயிரங்கணைகளைச்செலுத்தி தாரகன் நெற்றியைத்துளைத்தார்; தாரகன் ஒலிவென்று புலம்பி உதிரவெள்ளஞ்சொரிய தேரின்மீது மயங்கி மூர்ச்சித்து விழுந்தான்.

தங்கள் தலைவனாகிய தாரகன் மயங்கிவிழுந்ததைக்கண்ட அசுரசேனைகள் கோபித்து, சிவகுமாரராகிய செவ்வேட்பெருமானைச் சூழ்ந்துகொண்டார்கள்; சூழ்ந்து, சூலம், சக்கரம், தோமரம், பிண்டிபாலம், வேல், வாள், தண்டுமுதலிய படைக்கலங்களை மழைபோல் பொழிந்தார்கள். குமாரசுவாமி அதுகண்டு, தம்வில்லை வளைத்து சர

மழை பொழிந்து, அவுணர்களுடைய தலைகளையும், மார்புகளையும், கால்களையும், தோள்களையும், தாள்களையும் துணித்தார்; இரத்தவெள்ளம் கடல்போல் பெருகிற்று; அசுரர்கள் பலர் மடிந்தார்கள்; சிலர் இரத்தக்கடலிலே முழுகி நீந்தி, தத்தமுயிர்கொண்டு ஓடி ஒளிந்தார்கள்.

அப்பொழுது தாரகன் மயக்கம் நீங்கி எழுந்து, தன்னருகிலே நின்ற தனது சேனைகளைக் காணாது, துன்பங்கொண்டு நகைத்து, "சிவகுமாரன் ஒருவன் போர்செய்ய, நான் எனது புழைக்கையையும் கோடுகளையும் இழந்து, மயங்கிவிழுந்தேன்; என் சேனைகளையும் இழந்தேன்; தனித்து நிற்கின்றேன்; என் ஆண்மை அழுகிது; அழகிது; வில்வன்மை கணக்கற்ற கணைகளைத்தாண்டி இச்சிறுவனைக் கொல்வதும் வெல்வதும் அரிது; இனி தேவப்படைகளைச் செலுத்திப் போர்செய்வேன்" என்று சிந்தித்தான். சிந்தித்து, நாராயணப்படை, பிரமப்படை முதலிய தெய்வப்படைக்கலங்களைவிடவிட அவையெல்லாம் வந்துவந்து, அஞ்சி நடுநடுங்கி, எம்பெருமான் பக்கத்தே ஒதுங்கித்துதித்துக்கொண்டு நின்றன. அதுகண்டு தாரகன் செருக்கற்று அஞ்சினான்; மிக்க அற்புதமடைந்தான்; தீப்பொறிகள் சிந்தும் கண்களையுடையவனாகி, "இவனை வெல்லுவது அரிது" என்று எண்ணி, "இனி பசுபதிபத்திரத்தை விடக்கடவேன்" என்று நினைத்து அத்திருப்படையை எடுத்து, மனத்தாற்பூசித்து கோபத்தோடு செலுத்தினான்; அச்சிவப்படைக்கலம், விடத்தையும், தேவப்படைக்கலங்களையும், பூதங்களையும், பாம்புகளையும், சூலங்களையும், அக்கினியையும் உண்டாக்கிக்கொண்டு சருவாண்டங்களும் சகல உயிர்களும் உலைந்து சுழலும்வண்ணம் உருத்துச்சென்றது. குகப்பெருமான் அதுகண்டு, தந்தையாராகிய சந்திரசூடியைத் தியானித்துக்கொண்டு, ஒரு திருக்கரத்தைநீட்டி தந்தவன் வாங்குவதுபோல் அச்சிவப்படைக்கலத்தைப் பற்றிக்கொண்டார். தாரகன் அதுகண்டு "இன்றே எம் செல்வம் அழிந்தது" என்று ஏங்கினான்; "தேவதேவராகிய சிவபெருமானுடைய படைக்கலத்தையே இவன் பற்றினான் எனில் இவனை யாரால் வெல்லமுடியும்? இவனாற்றல் அளவிடற்பாலதோ? இவன் அறப்போரன்றி மாயப்போர் செய்யான்; நான் மாயைகளைச் செய்து மறைந்துநின்று போர்செய்வேன்" என்று எண்ணி விரைந்து கிரௌஞ்சமலையின் முன்சென்று "நீ வல்ல மாயைகளை விரைந்துசெய்வாய் செய்வாய்" என்று கூறினான். உடனே கிரௌஞ்சமலை முப்புரங்கள் பலவாய்வர, தாரகன் அப்புரங்களி



லுள்ள அசுரர்களாய் வந்தான். கிரௌஞ்சமலை பலபல மேகங்களாய் வர, தாரகன் அவற்றினுள்ளே இடியாய்வந்தான்; கிரௌஞ்சமலை பல கடல்களாய்வர, தாரகன் அவற்றினுள்ளே வடவாமுகாக்கினியாய் வந்தான்; கிரௌஞ்சமலை, சக்ரவாளகிரியைச்சூழும் இருளாய் வர, தாரகன் அதனுள்ளே பூதர்களாய் வந்தான்; கிரௌஞ்சமலை எட்டு திக்கயங்களாய்வர, தாரகன் குலமலைகளாய் சடசடவென்ற ஒலியோடுவந்தான்; கிரௌஞ்சமலை வாயுவாய்வர, தாரகன் அக்கினியாய் வந்தான்; கிரௌஞ்சமலை நெருப்புக்கொள்ளிகளாய் ஆகாயத்து வர, தாரகன் ஆயிரங்கோடி சூரியர்களாய் வந்தான்.

இவ்வாறு தாரகன் கிரௌஞ்சகிரியோடு அளவில்லாத மாயைகளைச்செய்துகொண்டு எங்கும் திரிதலும், அறுமுகக்கடவுள் இவற்றைக்கண்டு, தமது திருக்கரத்திலுள்ள வேலாயுதத்தை நோக்கி, நீ தாரகனையும் கிரௌஞ்சமலையையும், ஒரு கணப்பொழுதில் பிளந்து, உயிருண்டு, இலக்கத்தொன்பான் வீரர்களையும் பூதசேனாதிபதிகளையும் மீட்டுக்கொண்டு இங்கு வருவாயாக" என்று பணித்து, அதனைச் செலுத்தினார். சர்வசங்காரகாலத்தில் மாயையாலாகிய உலகங்களையும் உயிர்களையும் சிவமூர்த்தியினது நெற்றிக்கண்ணினின்றுந் தோன்றும் அக்கினி சுடுதல்போல, அவ்வேலாயுதம் தாரகனும் கிரௌஞ்சகிரியும் அங்கே செய்த மாயைகள் அனைத்தையும் விரைவில் அழித்தது; எம்பிரானுடைய ஆறு திருமுகங்களிலுமிருந்து எழுந்த சினம் திரண்டொரு வடிவெடுத்துச் செல்லல்போலவும், முக்கட்பெருமானுடைய முத்தலைச்சூலமிரண்டும் ஒருபடையாய்ச் செல்லல்போலவும், அவ்வேற்படை சென்றது. தாரகன், "இதனை நான் பிடித்து முறித்துவிடுவேன்" என்று கோபத்தோடு, அக்கினிமலையை எதிர்த்துவரும் கொசுவைப்போல் எதிர்த்து வந்தான். அவ்வாறுவந்த தாரகனுடைய மார்பாகிய வைரமலையின்மேல் இடிபோல்பட்டு வேற்படையானது அவன் மார்பைப்பிளந்து, கிரௌஞ்சமலையையுந் தகர்த்துச்சென்று, மிகுந்த கெம்பீரத்துடன் மீண்டு, மலையினுள்ளே துயில்கின்ற வீரர்களுக்கு உணர்வைத் தந்து எழுப்பிவிட்டு, ஆகாயத்திற் சென்று கங்கைநீராடிப் பரிசுத்தவடிவாய், இளம்பூரணனது கரமலரில்வந்து முன்போல் இருந்தது. வேலாயுதம், தாரகனுடைய மார்பையும் கிரௌஞ்சவெற்பையும் பிளந்தபோது உலகிலுள்ளோர், "பூமி பிளந்தது" என்றும், "மகாமேருமலை வெடித்தது" என்றும், "அண்டம் உடைந்தது" என்றும், பற்பலவாறு பேசிக்கொண்டார்

கள். வேற்படை தன்மார்பை ஊடறுத்துச்செல்ல, தாரகாசுரன் அநந்தகோடி இடிகள்போல் ஆர்த்து, எழுந்து துள்ளிப் பூமியிலே விழுந்து, பதைபதைத்து மாண்டான்.

தாரகன் மடிந்ததையும், கிரௌஞ்சகிரி பிளந்ததையும் மாலயனாதி வானவர்களும் மாதவர்களும்கண்டு, ஆரவாரித்தார்கள்; ஆடினார்கள்; பாடினார்கள்; கரமலர்கூப்பிக் கந்தவேளைத் துதித்தார்கள்; பூமழை பொழிந்தார்கள்; வலம்வந்து வணங்கினார்கள்; பன்முறை வீழ்ந்து வீழ்ந்துத் தொழுதார்கள்; பேரானந்தப் பெருங்கடலில் மூழ்கினார்கள்; கிரௌஞ்சகிரி யழிந்தவுடனே அதனுள் துயின்ற வீரவாகுதேவர் முதலியோர் மயக்கநீங்கியெழுந்து, விரைந்து சென்று குமரக்கடவுளுடைய குரைகழலை வணங்கித் துதித்து நின்றார்கள். கருணைக்கடலாகிய கந்தவேள், அவர்களைநோக்கி, "நீங்கள் அனைவரும்தாரகனால் கிரௌஞ்சமலைக்குள் மாயையில்அழுந்தி, அறிவிழுந்து அல்லற்பட்டீர்கள்போலும்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அவ்வருளுரையைக் கேட்ட வீரர்கள் "எந்தையே! உமது திருவருள் இருக்கும்பொழுது அடியேங்கள் அல்லற்படுவதுண்டோ? மையலுடன் உறங்குவோர்போல் இன்பமுற்றோமேயன்றி, கிரௌஞ்சகிரியின் மாயத்தால் சிறிதும் துன்பமடைந்திலேம்" என்று விண்ணப்பம் செய்தார்கள். அப்பொழுது அறுமுகவள்ளல் வீரவாகுதேவரை யழைத்து முன்னே தாரகன் விடுப்பத் தாம்பற்றிய சிவப்படைக் கலத்தை அவர் கையிற்கொடுத்து, "இதனை நீ வைத்துக்கொள்வாய்" என்று திருவாய்மலர்ந்து திருவருள்புரிந்தார். அதன்பின்பு, தாரகனுடைய போரில் இறந்த பூதர்கள் எல்லோரையும், நீங்கள் யாவரும் எழுந்திருங்கள்" என்று எழுப்பி, பூதசேனைகள் சூழ தேவர்கள் துதிக்க, வீரர்களுடன் போர்க்களத்தினின்றும் புறப்பட்டார்.

(தொடரும்)

---

## உபதேசம்.

கடவுள் பரிசுத்தமானவர். அசுத்தமான இடத்தில் இருக்கமாட்டார். அவர் உனது உள்ளக்கோயிலில் எழுந்தருளியிருக்க நீ உன் உள்ளத்தைப் பரிசுத்தமாக வைத்துக்கொள்ளவேண்டும். மது, மாமிசம், கோபம், பொறாமை, தீய எண்ணங்கள் முதலியவைகளால் உன் உள்ளத்தை அசுத்தப்படுத்தாதே. அசுத்தமாக்கிக்கொண்டால் உன் உள்ளத்தில் கடவுள் தங்கியிருக்கமாட்டார்.

உ

கார்த்திகேயன் துணை.

# கற்பு

(123-வது பக்கத் தொடர்ச்சி)

"கொண்டான் குறிப்பு அறிவாள் பெண்டாட்டி" என்ற அமுதமொழிப்படி, பெண்கள் நாயகனுடைய குறிப்புணர்ந்து, எவாமுன்னரே அவனுடைய கருத்தைச் செய்துமுடிக்கவேண்டும். குறிப்புணர்தல் என்னும் தன்மையை ஆடவர்களைக்காட்டிலும் பெண்கள் அவசியம் அனுசரித்தல் வேண்டும். கணவனுடைய முகத்தைக்கண்டு, அம்முகக்குறிப்பால் அவனுடைய உள்ளத்தை ஊகித்தறிதல் வேண்டும். அவ்வாறு குறிப்புணர்ந்து நடக்கும் மனைவியைக் காணுந்தோறும் கணவனுடைய உள்ளமும் உடம்பும் பூரிக்கும்.

"குறிப்பிற் குறிப்புணர்வாரை உறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்"

என்று பொய்யாமொழிப்படி குறிப்புணரும்பத்தினியைக் கணவன் தனது உயிரினுஞ் சிறந்தவளாக எண்ணி இன்புறுவான். மிக்க வறுமைப்பிணியால் வாடிமெலிந்த குசேலமுனிவருடைய மனைவியார் இக்குறிப்புணர்விலே சிறந்தவராக இருந்தார் என்று அந்நூலாசிரியர் கூறுமாறு காண்க.

"மாசிலாக் குலத்து வந்தாள் வருவிருந் துவப்ப வூட்டு
நேசமிக் குடையாள் கொண்க னினைப்பறிந் தொழுகு நீராள்"

தங்கள் வீட்டில் உலாவும் எறும்புக்குக்கூட உணவு கிடைக்காது, அத்துணை தரித்திர வாழ்விலிருந்து அந்த அம்மையார் கணவனுடைய நினைப்பறிந்து நினைவின்வண்ணம் ஒழுகிக்கொண்டு வந்தாரென்பது எத்துணைவியப்பைத்தருகின்றது.

இத்தகைய சதிபதிகளுக்கு எக்காலத்திலும் கருத்துவேற்றுமையுண்டாகாது. கணவனும் மனைவியும் சரீரத்தால்மட்டும் ஒன்றுபட்டு வாழ்வது சிறந்த வாழ்க்கையாகாது; அது மிருக வாழ்க்கை; இருவருடைய கருத்தும் ஒரே கருத்தாக இருத்தல்வேண்டும்; "காதல் இருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டதே இன்பம்" என்ற அமுத

வாக்கையுன்னுங்கள். அதன்படி கருத்தொருமித்து நடாத்தும் வாழ்க்கையே இன்பவாழ்க்கை; அதுவே புனிதவாழ்க்கை; அந்த வாழ்க்கையில் அணுத்துணையும் துன்பமுண்டாகாது; வேறு வகையில் துன்பமுண்டாயினும் பகலவனைக்கண்ட பனிபோல் நீங்கும். அநேக குடும்பங்களிலே கணவனுடைய எண்ணம் ஒன்று; மனைவியினுடைய எண்ணம் ஒன்ருக, கணவனைத் தன் எண்ணத்திற்கு இணங்கவில்லையென்று மனைவி வெறுப்பதும்; மனைவியைத் தன் எண்ணத்திற்கு இணங்கவில்லை என்று கணவன் வெறுப்பதுமாக வெறுப்பும் துன்பமும் நடமாடுகின்றன. அவர்கள் ஆழ்ந்து சிந்தித்து ஒருமைப்பாட்டையடைதல்வேண்டும். விருந்தினரை உபசரித்தல், கடவுள் வழிபாடு, உறவினருக்குதவுதல், ஏழைகட்கு இரங்குதல் முதலிய எல்லாக் காரியங்களிலும் நாயகனும் நாயகியும் ஒத்த மனமுடையவராய் விளங்கி அவைகளை இனிது முடித்து இன்புறவேண்டும்.

நாயக நாயகியர் ஈருடம்பிற்கு ஒருயிரென ஒன்றுபட வேண்டும்; அங்ஙனம் உயிர் ஒன்ருய் உடம்பு இரண்டாய் வாழும் வாழ்க்கையிலுண்டாகும் இன்பத்தைப்போல் இந்திரலோகத்திலும் இன்ப வாழ்க்கையிலுமுண்டாகாது. அந்த வாழ்க்கையை மேற்கொண்ட கணவன் மனைவி மடிந்தபின் வேருெரு மனைவியை மணப்புணர்ந்து இன்புறமாட்டான்; எல்லாவற்றையுந் துறந்து வெற்றுடப்புடன் புறப்பட்டு தவவொழுக்கத்தில் நின்று மாள்வான். மனைவியும் கணவன் உயிர் துறந்த அக்கணத்திலேயே உயிர்துறந்து நாயகனுயிரைத் தொடர்ந்து செல்லுவாள். சூரபன்மன் உயிர் துறந்தான் என்ற சொல் அவனுடைய மனைவியாகிய பதுமகோமளை, தனது செவியில் செல்லுமுன்னரே உயிர் துறந்தாள் என்னும் செய்தி கந்தபுராணத்தாற் கேட்கப்படுகின்றதல்லவா?

காவன் மன்னவ னிறந்தன னெனுமுரை கன்னத்துன்
மேவு மெல்லையி லசனியே றுண்டவெம் பணியேபோற்
றேவி யாகிய பதுமகோ மளையெனுந் திருமங்கை
யாவி நீங்கின டலையளி யாகிய ததுவன்றே.

இத்தகைய மற்ருெரு உத்தமி சரிதத்தையும் கேட்கின்ருேம். அது வருமாறு காண்க. ஒரு நகரத்தை யறநெறி தவருது ஒரு மன்னன் அரசுபுரிந்துவந்தான். தன்னுலும் தன் பரிசனத்தாலும் பகைவர்களாலும், கள்வர்களாலும், மிருகங்களினுலும் குடிகளுக்கு யாதொரு இடையூறுமின்றி நாட்டைப் பரிபாலித்துவந்தான். அம



மன்னனிடத்திலே சகல குணங்களும் பொருந்தியிருந்தன. அரசனுக்கு இருக்கவேண்டிய எல்லா அங்கங்களும் அம்மன்னனிடம் அமைந்திருந்தன. காட்சிக்கு எளியனய், காண்டற்கு இனியனய் விளங்கினன். அத்தகைய மன்னனுக்கு வாழ்க்கைத்துணைவியாக அமைந்தவள் பெயர் ஜோதிபாய். அம்மடமங்கை கணவனையே கடவுளாகக் கருதுபவள், கல்வியில் கலைமகளையொத்தவள், அழகில் அலைமகளையும், அறத்தில் மலைமகளையும், பொறுமையில் நிலமகளையுமொத்தவள்; தேனும் பாலும்போன்று இனிமையாகப் பேசுவாள்; தனது கணவனுடைய கருத்தறிந்து நடப்பாள்; தனது வேலைக்காரிகளையும் கடிந்து வன்சொல் வழங்கமாட்டாள்; கணவனுக்கு முன்னெழுந்து பின்னுறங்கும் பெருந்தகைமையுடையவள்; கணவனுக்கு ஆயுளும் புகழும், செல்வமும் மிகமிகப்பெருகுமாறு பற்பல நோன்புகள் நோற்பாள்; தான் அரசியாக இருந்தும், தன்னிடத்தில் ஆயிரக்கணக்கான பணியாளர்களிருந்தும் கணவன் உணவுக்கு வந்தபோது, தானே அருகிருந்து, அன்னை மகனுக்கு அன்னத்தை ஊட்டுவதுபோல், கணவனுக்கு அன்னத்தை ஊட்டுவாள். இத்தகைய கற்புடைப் பத்தினியைப்பெற்றதற்கு மன்னன் பலகாலும் மகிழ்வான். அந்நாட்டிலுள்ள குடிகள், "குணமே ஒரு வடிவமாகத்தோன்றிய இந்த மகாராணியை நாம் அரசியாகப் பெறுவதற்கு என்ன மாதவஞ் செய்தோமோ?" என்று வியந்து மகிழ்ந்து வணங்கி வாழ்த்துவார்கள்.

இத்தகைய நற்குண நங்கையுடன் மன்னன் வாழ்ந்துவரும் நாளில், ஒருநாள் ஏழாவதுமாடிமேல் அழகிய ஆசனத்தில் மன்னன் தனது மனைவியுடன் வீற்றிருந்தான். மெல்லிய சுகந்த காற்று வீசிக்கொண்டிருந்தது; மாலைநேரம்; கதிரவன் தன் கதிர்களையெல்லாம் ஒடுக்கிக்கொண்டு மேற்கடலிலே நீராடச்செல்பவன்போல் செல்கின்ருன்; பறவைகள் இனிய கீதங்களைப் பாடிக்கொண்டு தங்கள் கூடுகளுக்குச் சென்றுகொண்டிருந்தன; அநேக பக்தர்கள் அம்மாலை நேரத்தில் சந்திச் சபதபங்களை முடித்துக்கொண்டு தெய்வவழிபாட்டிற்காக தேவாலயத்திற்குச் சென்றுகொண்டிருந்தார்கள், காதலிகள் தம் காதலர் வரும்வழிமேல் விழிவைத்து எதிர்நோக்கிக்கொண்டிருந்தார்கள்; இட்டு உண்ணுதவன் செல்வம் எவ்வாறு விரைவிலழியுமோ அவ்வாறு வானவில் தோன்றி மறைந்தது; ஒவ்வொரு வீட்டிலும் வீட்டின் முன்புறத்தில் தண்ணீர்தெளித்து கோலமிட்டு தீபங்களை ஏற்றி, "அதிதிகள் யாராவது உணவுக்கு வருவார்களா" என்று

எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள்; எல்லா ஆலயங்களிலும் டாம் டாம் என்று கண்டாமணிகளின் நாதம் வானத்தை யளாவியது; காற்றுவாங்குவதற்காக அநேகர் வெட்டவெளிகளில் பரத்தையர் மனம் எப்படியலையுமோ? அப்படி உலாவிக்கொண்டிருந்தார்கள்; வீடுகள் தோறும் இளஞ் சிறுமிகள் வீணையைமீட்டி ஆகாயத்தில் செல்லும் கந்தருவர்கள் நாணுமாறு இனிமையாக குரலுக்கும் வீணைக்கும் பேதமின்றிப் பாடிக்கொண்டிருந்தார்கள்; அம்மாலை நேரத்தில் அந்நகரமானது அமராவதி நகரினும் பன்மடங்கு சிறப்புடையதாக விளங்கியது.

மன்னன் மேல்மாடியில் மனைவியை நோக்கி, "இலட்சுமி தேவியே இவ்வாறு உருவெடுத்து வந்திருக்கின்றுளோ" என்று ஐயுற்றுன். அவள் அருகில் வீற்றிருக்கும் தன்னை சசிதேவியின் அருகிலிருக்கும் இந்திரனுக நினைத்துக்கொண்டான்; "கற்பின் வடிவாய் வந்த இக்காரிகையுடன் சேர்ந்திருக்கும் இன்பத்தினும் சிறந்த இன்பம் இந்திரலோகத்திலும் இல்லை" என்று எண்ணினுன். ஒருகாலத்திலும் குவியாத ஜோதிபாயினுடைய திருமுகாரவிந்தத்தை நோக்கி, 'பெண்கள் நாயகமே! உலகம் போற்றும் உத்தமியே! நீ சிற்பசாஸ்திரம், சங்கீத சாத்திரம், பாக சாத்திரம், தரும சாத்திரம் முதலிய எல்லா சாத்திரங்களில் தேர்ச்சியுற்றிருக்கின்றுய்; உனக்கு எல்லாம் தெரிந்திருக்கின்றது; ஒன்றுமட்டும் தெரியாது" என்றுன். ஜோதிபாய், "மன்னர்பெரும! உலகில் எல்லாந்தெரிந்தவர்களும் ஏதுந்தெரியாதவர்களும் கிடையாது; எனக்குத்தெரியாத விஷயத்தைத் தாங்கள் கற்றுக்கொடுக்கலாமே? என்றுள். அரசன் புன்முறுவல்கொண்டு, "அழகிய ஆருயிர்க்காதலியே! உனக்குத் தெரியாத விஷயமாகிய அதனைக் கற்றுக்கொடுத்தாலும் நீ கற்றுக்கொள்ளமாட்டாய்; உன்னுல் கற்றுக்கொள்ளவும் முடியாது" என்றுன். ஜோதிபாய், "அது யாது?" என்றுள். மன்னன், "பெண்ணே! வேலைக்காரிகளிடத்திலும் உனக்குக் கோபிக்கத்தெரியாது; அந்தக் கோபமென்பதே எப்படியிருக்குமென்பது உனக்குத் தெரியவே தெரியாது; அதைக் கற்றுக்கொடுத்தாலும் உனக்கு வராது; பொறுமைக் கடலாகிய உன்னைக்கண்டு அது பயப்படுகின்றது" என்று சொல்லி அவளைத் தழுவினுன். ஜோதிபாய் மகிழ்ந்து, "தருமதுரையே! தனுர்வேதம் ஆயுர்வேதம், அருத்தவேதம், புராணம், நியாயம், ஸ்மிருதி, சுருதி முதலிய எல்லாவற்றையுமுணர்ந்த தாங்கள், வந்து கேட்போர்க்கு



"இல்லை" என்றுசொல்லக் கற்றுக்கொள்ளவில்லையல்லவா? இல்லையென்று சொல்லவே தங்களுக்குத்தெரியாது; அதைத் தாங்கள் கற்றுக்கொள்ளமுடியுமா" ? என்று கேட்டாள். மன்னனும் ஜோதிபாயும் இப்படிப் பொருளடங்கிய மொழிகளைக்கூறிப் பேசிக்கொண்டிருந்த போது தெருவில் பெருஞ்சத்தமுண்டாயிற்று; மன்னன் எழுந்துபார்த்தான்; உயிரற்ற உடல் ஒன்று அலங்கரித்த விமானத்தின்மேல் போய்க்கொண்டிருந்தது; அதைத்தொடர்ந்து ஒரு இளம்பெண் இரதியையொத்த அழகுடன் கண்ணீரால் பூமியை நனைத்துக்கொண்டு உடன்கட்டையேறும்பொருட்டு தொடர்ந்துசென்றுள். அவளை எல்லோரும் அவள் கற்புக்கு மெச்சி வணங்கினுர்கள். கணவன் இறந்தபின் வாழமாட்டேன் என்று உடன்கட்டையேறும் உத்தமியைத் தொடர்ந்து அநேகர் போய்க்கொண்டிருந்தார்கள். இக்காட்சியைக் கண்ட மன்னன் அற்புதமெய்தி, மனைவியை நோக்கி, "மாதர் மணியே! என்ன அற்புதம்; என்ன பரிதாபம்! நம் நாட்டில் இது ஒரு பெரியசம்பவம். கணவன் மரித்தபின் உயிர்தரித்துவாழேன் என்று இந்த உத்தமி உடன்கட்டை ஏறப்போகின்றுளாம்; என்னே! இவளுடைய அன்பு? அன்பு எதைச்செய்யாது? உயிரையும் தரும் பாக்குகின்றது" என்று மனமுருகிச்சொன்னுன்.

ஜோதிபாய், "நாயக! இவளைப்பற்றித் தாங்கள் அற்புதமடைவது சிறந்ததாக ஆகாது; இதுவொன்றும் அற்புதமல்ல; அன்புமல்ல; வெறுக்கத்தக்கதே" என்றுள். மன்னன் திடுக்கிட்டான். "பெண்ணே! ஏன் அப்படிச்சொல்கின்றுய்? உடன்கட்டையேறுவது என்றுல் அது அன்பினுல் நிகழப்படுவதல்லவா? அற்புதமல்லவா? ஏன் இதை நீ வெறுக்கின்றுய்?" என்று வினவினுன். ஜோதிபாய், "வேந்தர்வேந்தே! உத்தமக்கற்பும், தலையன்பும், நிறைகுணமுமுடைய பெண்கள் தன் கணவன் மாண்டான் என்னும்சொல் செவியிற்புகுமுன்னரே உயிரை விடுவார்கள்; கணவன் உயிர் பிரிந்துகொண்டிருக்கும்போதே ஒரு கற்புடைப்பெண் தானும் உயிர்துறந்து சுவர்க்கலோகத்தில் தனது கணவனை வரவேற்கச்சென்றுள் என்றுல் அதுவல்லவா? உத்தமக்கற்பு; அதுவே சிறந்த அன்பு. மத்திமக்கற்பும், இடையன்பும் உடைய பெண்கள், கணவன் இறந்தபின் சிறிதுநேரமிருந்து கணவனுடன் கட்டையேறுவார்கள். அதமக்கற்பும் கடையன்பும் உடைய பெண்கள் கணவனிறந்தபின் மிகவும்வருந்தி, வெள்ளைப்புடவையுடுத்தி மயிர்களைந்து, ஒருவேளையுண்டு, தரையிற்படுத்து, தாம்பூலம், இராவுணவு

எண்ணெய்முதலியவைகளை நீக்கி, ஆலயவழிபாடும் திருப்பணிகளும் செய்துகொண்டு, ஜெபதப விரதங்களை மேற்கொண்டு, இளைத்த உடம்புடன் தவவொழுக்கத்திலிருப்பார்கள். இவ்வாறு தலை, இடை, கடை என அன்பு மூன்று வகையாகப் பிரிக்கப்படுகின்றது. ஆதலால் உடன்கட்டை யேறுவது இடையன்பே தவிர, தலையன்பாகாது. மன்னரேரே! உடன்கட்டையேறும் இப்பெண்ணைப்பற்றித் தாங்கள் அற்புதமடையவேண்டாம்; இது சிறப்புடைத்தன்று" என்று சொன்னாள்.

இவ்வசனங்களைக்கேட்ட மன்னன் இறும்பூதெய்தி, "இவளிடம் அத்தகைய தலையன்பு உளதா ? சொல்லுவது யார்க்கும் எளிது; சொல்லியவண்ணம் நடப்பது அரிதல்லவா ?

சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்

சமயம் வந்தபோது இதனைப் பரிசோதித்து உண்மையுணர்வோம்" என்று எண்ணி அது சம்மந்தமான பேச்சை நிறுத்திக்கொண்டான்.

சிலநாள்கள் சென்றன; மன்னன் ஒருநாள் மந்திரி, வேடர்வில்லியருடன் வேட்டையாடக் கானகத்திற்குச் சென்றான். உச்சிப்பொழுதுவரை வேட்டையாடினான்; பல மிருகங்களைக் கொன்றான்; பலவற்றை விரட்டியடித்தான் ; களைத்து ஒருகூடாரத்தில் தங்கினான்; மாலைநேரம் வந்தது. அம்மாலைநேரத்தில் மெல்ல கூடாரத்தின்முன் உலாவிக்கொண்டிருந்தான். முன்னொருநாள் அரண்மனை மேல்மாடியில் தனக்கும் மனைவிக்கும் நிகழ்ந்த உரைத்தொகுதிகளை அம்மாலைநேரம் நினைவூட்டியது "தலையன்புடைப்பெண்டிர் கணவன் மரித்தான் என்ற சொல் கன்னத்துள் செல்லுமுன்னரே உயிர்துறப்பார்" என்று நமது மனைவி சொன்னாளல்லவா ? அவ்வன்பு அவளிடமுளதா என்று இப்போது சோதித்து அறியலாம்" என்று எண்ணி ஒரு ஏவலாளை நோக்கி, "நீ விரைந்துசென்று மகாராணியிடம் 'அரசனைப் புலியடித்துக் கொன்றுவிட்டது' என்று கூறு ; அப்படிக்கூறியவுடன் அங்கு என்ன நிகழுகின்றதென்பதைத் தெரிந்துகொண்டுவா" என்று அனுப்பினான். அப்பணியாளன் காற்றினும் விரைந்து அரண்மனைக்கு வந்து, ஜோதியம்மையைப் பணிந்து கண் கலங்கிநின்றான். ஜோதிபாய் அவனை நோக்கி, "அப்பா ! ஏன் கலங்குகின்றாய்? என்ன விஷயம் ? சொல்" என்றாள். பணியாளன், "அம்மா ! நான் எவ்வாறு கூறுவேன் ? சொல்ல நாவு நடுங்குகின்றது ; மகாராசா வேட்

உ

ஓம் குஹாய நம:

# குமரகுருபர ஸ்வாமிகள்

சரித்திரம்.

A. M. நாராயணசாமி அய்யர், மதுரை.

(128-ம் பக்கத் தொடர்ச்சி.)

40-வது நாள் மாலைப்போது வந்தும் குழந்தை வாய்திறந்துபேசவில்லையென்றால், அவர்கள் அடைந்த துன்பம் அளவிடமுடியுமோ! என்செய்வது! அர்த்தசாம பூஜையும் ஆரம்பமாயிற்று ; ஆனால் குழந்தையோ பேசவில்லை. பெற்றோர் இருவரும் சித்தம் கலங்கியவர்களாகி செந்திலாண்டவன்முன் பணிந்து, ஐயனே ! நீயே தஞ்சம் என்று இருந்தோமே? இன்றோடு 40 நாட்களும் ஆயினவே! குழந்தை பேசினன் இல்லையே! அடியேங்களை இன்னமும் சோதித்தல் கூடுமோ? தஞ்சம் என்று அடைந்தார்க்கு ஆதரவுசெய்யாது

---

டையாடப்போன இடத்தில், ஒரு பெருப்புலி ராசாவை அடித்துக் கொன்றுவிட்டது" என்றான். ஜோதிபாய், அவ்வார்த்தை கேட்டுக் கொண்டிருக்கும்போதே "ஆ! பிராணகாந்தா !" என்று உயிரற்ற உடம்பாக விழுந்துவிட்டாள். அவன்சொல் முடியுமுன்னமே அவளுடம்பினின்றும் உயிர் பிரிந்துவிட்டது. என்னே அன்பின் மாண்பு! அருகிலிருந்தோர் அனைவரும் அசைவற்றுநின்றனர். பணியாளன் இத்துன்ப சம்பவத்தைக்கண்டு தலையிலடித்துக்கொண்டு ஓடி மன்னனிடம் நிகழ்ந்ததைக்கூறினான். இடியைக்கேட்ட பன்னகம்போல் மன்னன் நடுநடுங்கி மூர்ச்சித்தான். மூர்ச்சித்து என்பயன்? மன்னன் வாழ்க்கையை வெறுத்து துறவுபெற்று தவவொழுக்கத்தை மேற்கொண்டு, சுவர்க்கலோகம்போந்து மனைவியுடன் நெடுங்காலம் இன்புற்றான்.

ஜோதிபாயம்மையினுடைய அன்பே சிறந்த அன்பு. அவ்வன்பு மூவுலகத்தையும் அடிமைப்படுத்தும். உலகத்தை ஒற்றுமைப்படுத்தும். அவ்வன்பு உலகமெங்கும் ஓங்கி வளர்வதாக.

(தொடரும்).

இருப்பது முறையோ? "கருணாகரன்; அடியவர் இச்சையில் எவை எவை உற்றன; அவை தருவித்து அருள்பவன்" என்பவை யாவும் பொய்யோ? முத்தமிழால் வைதாரையும் வாழ்விப்பவன் நீயன்றோ? ஆபத்பாந்தவ! இன்னும் உன் சித்தம் இரங்காத காரணம் யாதோ? நீயே சீற்றங்கொண்டால் அடியேங்கள் எப்படி இனி யாரை நத்தி உய்வோம்; இனி எங்கட்குப் புகலிடமேதுளது? அடியேங்கள் கொண்ட உறுதிப்படி விடியுமுன் குழந்தை குமரகுருபரன் வாய்திறந்து பேசவில்லையேயானால் இவ்விடத்திலேயே இறப்பது திண்ணம். அப்படிச்செய்வது உனக்கு இழுக்காகும்; ஆதலின் எமது குறையைத் தீர்ப்பாயாக! எனப் பலவிதத்தாலும் மனங்கலங்கி நெஞ்சம் நெக்குறுகக் கசிந்து கதறினார்கள்.

இவ்வாறு பெற்றோர்கள் இருவரும் மனம் சோர்ந்து கண் அயரவும், அடியார்க்கருளும் அயில்வேல் கடவுள் அர்ச்சகர் வடிவங்கொண்டு அத்தனியிளங்குழவி அருகில்சென்று, "அப்பனே குமரகுருபர! எனத் தட்டியெழுப்பி, "குழந்தாய்! இனி நீ உனது மௌனம் நீங்கி சைவமதத்தை தரணியில் தழைக்கச்செய்வாயாக" எனக்கூறி, அவர்தம் நாவில் சடக்ஷர மந்திரத்தை எழுதி, சைவசித்தாந்த உணர்ச்சியையும் நல்கி மறைந்தார்.

அர்ச்சகர் வடிவாகத் தன்முன் தோன்றிய உருவம் மறைதலும் குமரகுருபரர் திகைத்தவராகித் தம்முன் தோன்றியது முருகப்பெருமானே எனத்தேர்ந்து, "அந்தோ! என்முன் வலியவந்து அடியேனை ஆட்கொண்டது அறுமுகன் என்பதை அறியாமற்போயினேனே! என்னே என் மதியீனம்?" என மனம்புழுங்கி, முருகா! முருகா!! முருகா!!! எனப்புலம்பலுற்றார்.

மழையை எதிர்பார்த்துக் காய்ந்துகிடக்கும் பயிரைப்போன்று குமரகுருபரர் வாய்திறந்து பேசும் சொல்லை எப்பொழுது ஆர்வமுடன் கேட்போம் என்று வாடிக்கிடக்கும் பெற்றோர்கள் குழந்தையின் வாக்கிலிருந்து முருகா என்ற தேனினும் இனிய சொல் தோன்றலும், குழந்தையின் அருகில்சென்று, அவரை வாரியெடுத்து உச்சி மோந்து தாம் செய்வது என்ன என்பதையும் உணராதவர்களாகி, ஆனந்தமேலீட்டால் ஆடினர், பாடினர் "அப்பனே! முருகா! ஆபத்பாந்தவன்! அனாதரக்ஷகன்! அடியார்க்கருள்பவன்! தீனபந்து தீனதயாளு! என்பது உனக்கே பொருந்தும்; நீயே உண்மைத்தெய்வம் நீயே! கலியுகவரதன் எங்கள் வயிற்றில் பாலை வார்த்த பாலாபிஷேகா! பன்னிருகையா! பரமனது அருள்புதல்வா! மாது வள்ளி மோகனா!" எனப் போற்றித்துதித்தனர்.



பின்னர் எல்லோரும் கடலை அடைந்து ஸ்நானஞ்செய்து காதலோடு கந்தன்முன் அடைந்து கழலடிபோற்றிக் களித்தனர். அவ்வமயம் குமரகுருபரர் அருள் அறிவின் ஊற்றெழுந்து, அன்பமுதச் சொல்பெருகி, பொருள் அழகு வாய்ந்த **"கந்தர் கலிவெண்பா"** ஆகிய பாமாலையைத்தொடுத்து செந்திலாண்டவன் திருவடியில் சூட்டினர். பிறந்ததுமுதல் ஐந்து ஆண்டுவரையிலும் வாய்திறந்து பேசாத குழந்தையானது, எண்ணிலாக்கலைகளின் நல்லறிவையும், அவ்வறிவை பிறருக்கு இனிது எடுத்து இயம்பவும் பெருஞ்சொல்மாரி இயற்றும் திறமையும், கேட்டாரைப் பிணித்தும் கேளாதவர்களையும் கேட்க விருப்பமூட்டும் இனிய கவிமழை பொழிந்திடின் அக்குழந்தையின் பெற்றோர் அடைந்த ஆனந்தம் அளவிடப்பெறுமோ?

> ஈன்ற பொழுதில் பெரிது உவக்கும் தன்மகனைச்
> சான்றோன் எனக்கேட்ட தாய்

தாயும் தந்தையரும் இன்னும் சிலகாலம் செந்திலம்பதியில் இருந்துவந்தனர். அவ்வமயம் ஓர்நாள் குமரகுருபரர் தமக்கு ஞான மார்க்கம் நல்கும்படி ஞானபண்டிதன்முன் குறையிரந்து நிற்றலும், தந்தைக்கு உபதேசித்த தனயன், "அன்பனே! குமரகுருபர! நீ இவ்விடம் நீங்கி வடநாட்டை நோக்கிப்போவாயாக; உனது மொழி யார்முன்பு தடைபடுகிறதோ அவரே உனக்கு ஞானமார்க்கம் நல்கும் ஆசிரியர் ஆவர்; அவரால் உண்மை அறிவைப்பெற்று சைவம் தரணியில் தழைக்கச்செய்வாயாக" என்று விண்ணிடை ஓர் பேரொலியைத் தோற்றுவித்தார், அம்மொழிகேட்ட குமரகுருபரரும் அவர்தம் பெற்றோர்களும் பேர் உவகையுற்று நல்லதோர் நாளில் தாம்வதியும் திருக்கைலாயபுரத்தை அடைந்தனர்.

அசுரர்களைவாட்டி மிகவாழ அமரர் சிறைமீட்டின பெருமானது திருஅருட்டன்மையால் ஐந்து ஆண்டுகள் வரையும் பேசாத குழவியானது திடீரென்று அருட்கவியாகிய கவிமழை பொழிவது கேட்ட பலரும் இவ்வதிசயம் காண, ஷண்முகச்சிகாமணிக் கவிராயரது இல்லத்தை அடைந்தனர். வந்தவர் யாவரையும் ஷண்முகசிகாமணிக் கவிராயர் அன்புடன் வரவழைத்து விருந்துகள்செய்து அனுப்பினர்.

குமரகுருபரர் திருக்கைலாயபுரத்தில் இருந்தவரையில் அவரைக்கண்டு களிக்க அவண் அடைந்த கூட்டம் கூறுந்தரம் உடையதன்று ஓர் நாள் கைலாயநாதரது ஆலயம் அடைந்த குமரகுருபரர் ஆங்கு எழுந்தருளியுள்ள ஆலமுண்டகண்டர்க்குக் "கைலைக்கலம்பகம்" என்ற அரிய பாமாலையைச்சூட்டிக் களித்தனர்.

நாட்கள் செல்லச்செல்ல அடிகளது நாட்டம் முழுவதும் ஞானாசிரியரைத் தேடி அடைந்து அவர்பால் அறிவுறைபெறவே முனைந்தபடியினுல் அவர் தம் பெற்ருேர்பால் விடைபெற்றுக்கொண்டு, தம் தம்பி "குமாரனும்" பின்தொடர, முருகப்பெருமான் கட்டளையிட்டவண்ணமே வடதிசைநோக்கிப் புறப்பட்டவராகி, திருநெல்வேலி, திருக்குற்ருலம், திருச்சுழியல், திருக்கானப்பேர், திருவட்டானே, திருப்புனவாயில், திருக்கொடுங்குன்றம், திருப்புவனம், திருப்பத்தூர், திருப்பெருந்துறை, திருவிராமேச்சுவரம் முதலிய திருத்தலங்களில் எழுந்தருளிய மூர்த்திகளேக்கண்டு தெரிசித்துக்கொண்டு, ஆறுபடைவீட்டினுள் முதன்மையதான திருப்பரங்குன்றம் அணுகி, ஆண்டு கோயில்கொண்ட கோழிக்கொடியோன் அடிபணிந்தார். அவ்விடத்தில் முருகபெருமானது அருகில் அமர்ந்துள்ள மீனும்பிகை அம்மையாரை தரிசித்த அடிகட்கு திருவாலவாயிலில் திருக்கோயில்கொண்ட திகம்புரியின் திருவுருவுத்தோற்றம் காண அவாவுண்டாயிற்று. அடிகளது ஆர்வம்கண்ட மீனும்பிகை அம்மையார் அன்னூர்க்குத் தமது இளந்திருக்கோலத்தை நினைப்பூட்டி அருளினுர். உடனே அருட்கவிவாணர் அம்மையாரின் அருளால் பிள்ளேக்கவி ஒன்று பாடினுர். அடிகளின் பாமாலேயின் பரிமணத்திஞல் பரவசம் ஆகிய பர்வதராஜனின் குமாரியாம் மீனும்பிகை அம்மையார் அன்றிரவு பாண்டிநாட்டரசனும் திருமலேநாயக்கனது கனவில் தோன்றி, "மனுநெறி தவராது ஆட்சிபுரியும் மன்னு! நமது செல்வனும் செவ்வேட்பாமனது அருள்பெற்ற அன்பன் குமரகுருபரன் நம்மீது இனிமைவாய்ந்த பிள்ளேத்தமிழ் பாடியுள்ளான்; அவன் இவ்வமயம் திருப்பரங்குன்றத்தில் இருக்கின்ருன்; நம்மைக்காண மிகவும் ஆவலும்கொண்டுள்ளான்; ஆதலின் நீ உனது பரிவாரம்சூழத் திருப்பரங்குன்றம்சென்று அவனே மரியாதையுடன் அழைத்துவந்து எமது திருமுன்பு அக்கவியை அரங்கேற்றுவாயாக என்று கூறினுர்.

(தொடரும்).

